மின்னும்புகர் வேலவ னங்குளன் வீர வாகு
பின்னின் றனனீ துணரான்பிற ராரு மற்றே
முன்னின்ற நம்மை யிவனட்டிடு மொய்ம்பி லேமியா
மென்னிங்கு நிற்ப தெனப்பூத ரிரிந்து போனார். (ககூசு)

இரிகின்ற பூத ரெவரும்படைக் கீற்றி னின்ற
வரிகின்ற தண்டா ரடனமொய்ம்புடை வள்ளல் பாங்கர்ப்
பரிகின்ற நெஞ்சத் தொடுசெல்லவப் பான்மை யாவுந்
தெரிகின்ற னுக்கிர னென்பதொர் சேனை வேந்தன். (ககூஎ)

கண்டுக்கிர னாகிய பூதன் கனன்று செங்கண்
விண்டிற் பெரிது நிவப்புற்று விளங்கு பொன்னந்
தண்டப்படை யொன்றினை யங்கையிற் றாங்கி யேகி
யண்டத் தவர்கள் புகழத்தனி யார்த்து நேர்ந்தான். (ககூஅ)

செற்றத்துட னுக்கிர னேர்புகு செய்கை தன்னைக்
கற்றைக் கதிரைத் தனையிட் டவன்கண்டு தன்கைக்
கொற்றச் சிலையைக் குனித்தாயிர கோடி வாளி
முற்றத் துரந்தே யவன்யாக்கையை மூடி யார்த்தான். (ககூகூ)

மைக்கின்ற மேனி நெடும்பூதனை வஞ்சன் வாளி
தைக்கின் றிலவா னுதிமாய்ந்து தளர்ந்து வீழ்ந்த
மெய்க்கின்ற வின்பு மறனும் விளையாது வாளா
பொய்க்கின்ற வன்கைப் பொருள்வல்லையிற் போவ தேபோல். (உ00)

விடுகின்ற வாளி பயனின்றயல் வீழ்த லோடும்
படுகின்ற தன்மை யதுகண்டனன் பானு கோப
னடுகின்ற தெவ்வா றிவன்றன்னையென் றங்கண் வானந்
தொடுகின்ற தாங்கோ ரெழுவத்தைச் சுழற்றி விட்டான். (உ0க)

தீயன் முசலந் தனையுக்கிரன் செங்கை தாங்கு
மாய்திண் கதையாற் சிதைத்தேயவன் றேரை யண்மிப்
பாயும் பரியைப் புடைத்தொல்லையிற் பாரின் வீட்ட
வேயென்று பல்கா லிகழ்ந்தார்த்தனர் யாரும் வானோர். (உ0உ)

புரவித் தொகுதி விளிவாகப் பொருவின் மைந்த
னெரியிற் கனன்று புலடயோரிர தத்தின் வாவி
வரிவிற் குனித்துக் கிரனேந்தும் வலிய தண்ட
முரிவுற் றிடவே யொருநூறுமொட் டம்பு தொட்டான். (உ0ங)

நூறொண் கணையா லவன்றண்டநுண் டூள தாகச்
சீறுந் திறலுக் கிரன்கைக்கொடு தீயன் மைந்த
னேறுந் தடந்தோ தனைவானி னெடுத்து வீச
வீறும் பரிதி பதத்தின்றுணை மேய தன்றே. (உ0ச)

துன்னுன் மதலை வருகின்றது சூர னோக்கி
முன்னுளி னின்று நமைப்பற்ற முயன்று ளான்கொ
லன்னான் புணர்ப்பை யுணரேனணித் தாகு மின்ன
மென்னுவ.தோவென் றுளத்துன்னி யிரிந்து போனான். (உ0ரு)

தேரோடு சென்ற வசுரன்மகன் சேணின் மீண்டு
பாரோடு சேர்வான் வருகின்ற பரிசு நோக்கிற்
காரோடு வானந் தவறுற்றுழிக் காமர் தாருத்
தூரோடு சாய்ந்து மறிகின்றதொர் தோற்ற மொக்கும். (உ0௬)

வேறு.

வீழு கின்றதே ரொருவியே வெங்கதிர்ப் பகைஞன்
ஞழு மெய்யுடை யுக்கிரன் றன்னைவந் தணுகி
மாழை யொண்கையா லெற்றியே யெடுத்துவா னுலகோ
ரேழை யுங்கடந் தப்புறஞ் சென்றிட வெறிந்தான். (உ0௭)

எறியும் வெய்யவன் வேறொரு தேரின்மே லேறி
வெறிகொள் பங்கயத் தண்ணலார் விதித்துமுன் னளித்த
செறியு மூவிலை யிருதலை வேலினைச் சேண்போய்
மறியு முக்கிர னெதிர்புக விடுத்தனன் மன்னோ. (உ0௮)

விடுத்த தெய்வவே லுக்கிரன் மருமத்தை விடர்போற்
படுத்தி யேபுகுந் தப்புறம் போந்திடப் பாரி
னடுத்து மற்றவன் சிறிதயர் வுற்றன னதுகண்
டெடுத்த குன்றொடுந் தண்டியென் றுரைப்பவ னெதிர்ந்தான். (உ0௯)

தண்டி யாகிய பாரிடன் றனதுகைத் தலத்தின்
மிண்டு கின்றதோ ரடுக்கலை யவன்மிசை வீசக்
கொண்ட வார்சிலை வாங்கியா யிரங்கணை கோத்துக்
கண்ட துண்டம தாக்கின னதனையோர் கணத்தில். (உக0)

வெற்பு நுண்டுக ளாதலும் விண்ணுற நிமிர்ந்து
கற்ப கம்புரை மாமர மொன்றினைக் களைந்து
வற்பு றுங்கரந் தனிலெடுத் தவுணர்கோன் மணித்தேர்
முற்பு குந்திடும் பரிகளைப் புடைத்தனன் மொய்ம்பால். (உகக)

மொய்ம்பி னிற்புடைத் திடுதலுங் கவனமா முழுது
மம்பு வித்தலை மறிந்தன வதற்குமுன் னவுணன்
பைம்பொன் முத்தலைப் பலபதி னாயிரம் பகழி
செம்பு னற்கொளத் தண்டிதன் னெற்றியுட் செறித்தான். (உகஉ)

செறித்த காலையின் மெலிந்தனன் றண்டியச் செய்கை
குறித்து நோக்கியே பிஞகியாம் பூதனோர் குன்றம்
பறித்து வீசுவான் முயறலு மாயிரம் பகழி
நிறத்தின் மூழ்குமா றெய்தன னனையனு நின்றான். (உகங)

குன்று கொண்டகைப் பிஞகியுந் தொல்வலி குறைந்து
நின்ற காலையி லேனைய பூதரு நேர்ந்து
சென்று வீற்றுவீற் றமரினைச் சிலபொழு தியற்றி
யொன்று தீங்கதிர்ப் பகைஞனுக் காற்றல ருடைந்தார். (உகச)

எண்ட ருங்கணத் தலைவர்க டொலைதலு மிதனைக்
கண்டு வெஞ்சினந் திருகியே யெதிர்ந்தனர் கபாலி
யிண்ட லோசன னிரஞ்சன னுருத்திர னகண்டன்
றண்ட கன்முத லிலக்கமா கியபடைத் தலைவர். (உகரு)

மிடல்ப டைத்திடு மிலக்கமாம் வீரரும் விரவித்
தடம ணிப்பெருந் தேரொடு மவுணன்முன் சார்ந்து
சுடரு டைக்கட கங்கிளர் செங்கையிற் றன்னுங்
கொடும ரத்தினைக் குனித்தனர் நாணொலி கொண்டார். (உ௧௬)

கவடு பட்டிடு மீரிரு மருப்புடைக் கருபக்
குவடு பட்டதை யுரைப்பதெ னொருகரிக் கொம்பாற்
சுவடு பட்டிடு மேருவுஞ் சலித்தது துளங்கிச்
செவிடு பட்டன வானமும் வையமுந் திசையும். (உ௧௭)

பானு கோபன்மற் றதுகண்டு சிறுநகை படைத்து
மான வெஞ்சிலை யொன்றினைத் தோள்கொடு வணக்கி
மேன லந்திக ழண்டங்கள் யாவையும் வெருவத்
தேனின் வீழ்ச்சியை மலைந்திடுங் குணத்தொலி செய்தான். (உ௧௮)

உலத்தின் மேற்படு மொய்ம்புடை யிலக்கரு மொருங்கே
வலத்தில் வெஞ்சிலை யிடத்தினில் வடிக்கணை தொடுத்து
நிலத்தில் வந்துகார் நெடும்புனல் சிதறிய நெறிபோற்
புலத்தி யன்முறைப் பேரன்மேற் றலைத்தலை பொழிந்தார். (உ௧௯)

தொடலை யம்புயத் திலக்கமாம் பொருநருந் தொடுத்து
விடுச ரத்தொகை யவுணன்மேல் வீற்றுவீற் றேக
நெடிய தெண்டிரைப் பேரியா றெண்ணில நிரந்து
புடவி கொண்டதோ ரளக்கர்மேற் போவன போலும். (உ௨0)

இலக்கர் விட்டிடு சரமெலா மவுணர்க ளெவரும்
கலக்க முற்றிட வருதலுஞ் சூர்மகன் கண்டே
கொலைக்கொ டுஞ்சிலை வளைத்ததி லாயிர கோடி
விலக்க ருங்கணை தொடுத்தவை யறுத்தனன் விரைவில். (உ௨௧)

அறுத்து மற்றுமோ ராயிர கோடியம் பதனைச்
செறுத்து விட்டிட வறுமுகன் பரிசனர் தெரிந்து
விறற்க டுங்கணை யாங்கதற் கெழுமையால் விடுத்து
மறித்து மீண்டிடு வித்தன ரவுணர்கோன் வாளி. (உ௨௨)

அறந்தி றம்பிய சூர்மகன் வாளிக ளனைத்து
முறிந்து மற்றவன் றன்மிசை யுற்றன முழங்கிச்
செறிந்த மாமுகி லுயிர்த்திடுஞ் சீகரஞ் செல்லா
தெறிந்து கால்பொர வந்துழி மீண்டுபோ மியல்போல். (உ௨௩)

செங்க திர்ப்பகை சீறியே செயிரிலா வயிரத்
துங்க வெங்கணை யபரித மிசைமிசை துரந்து
வெங்கண் வீரர்கள் செலுத்திய சரமெலாம் விலக்கி
யங்கை யிற்கொண்ட கார்முக மிலக்கமு மறுத்தான். (உ௨௪)

பிடித்த கார்முக மற்றுழி மானவர் பெயர்த்துந்
தடத்த தேரிடை யிருந்திடுஞ் சேமமாந் தனுக்க
ளெடுத்து வாங்கியே சரந்துரந் திரவியம் பகைஞன்
றொடுத்து மேல்விடுங் கணைகளை யிடையிடை துணித்தார். (உ௨௫)

சூரன் மாமகன் றெடுசரந் துணித்தபின் றாண்டுந்
தேரி லாயிரம் பரியினூ றாயிரந் தெழித்துக்
காரு லாவரு பதாகையி லாயிரங் கடவி
யூரும் வன்மைசேர் வலவன்மே லாயிர முய்த்தார். (உ௨௬)

வசையில் வீரர்க ளிவ்வகை விடுத்தலு மனத்திற்
பசையில் சூர்மக னிரதமும் பரிகளும் பாகு
மசனி கொண்டதோர் துவசமு மற்றன வதற்பின்
விசையில் வேறொரு தேரிடைப் பாய்ந்தனன் வெகுண்டு. (உ௨௭)

வைய மேற்செலு மவுணர்கோன் றன்சிலை வணக்கிச்
செய்ய கூர்ங்கணை நூறுறா றாயிரஞ் செலுத்தி
யையன் விட்டவர் தேரொடு சிலைகளை யறுத்து
மெய்யி டந்தொறு மழுத்தின னெண்ணிலா விசிகம். (உ௨௮)

பரிதி மாற்றலன் பகழிகண் மெய்யெலாம் பட்டுக்
குருதி சோர்தலு மிலக்கருந் தொல்வலி குறைந்து
பெரிது நோயுழந் தாற்றல ராகியே பின்னர்ப்
பொருதி றந்தனை நினைந்தில ருடைந்துபின் போனார். (உ௨௯)

வற்பு றுத்திய விலக்கம்வில் லாளரு மலைய
விற்பி டித்தவ னொருவனே யாரையும் வென்றான்
முற்ப கற்புரி தவப்பய னிஃதென மொழிமோ
கற்பி னாற்றலென் றுரைத்துமோ கழறுவ தெவையே. (உ௩௦)

ஆன காலையில் வீரகோ ளரியென வறையு
மான வீரன்மற் றதுகண்டு தனதுவில் வளைத்துப்
பானு கோபன்முன் னெய்தியே பிறைமுகப் பகழி
சோனை மாரியும் விம்மித முற்றிடச் சொரிந்தான். (உ௩௧)

சொரிந்த காலையி லதுகண்டு சூரன்மா மதலை
சிரந் துளக்கியே யீங்கிவ னாற்றலுந் திறலும்
பெருந்த னிச்சிலை விஞ்சையு நன்றெனப் பேசி
வரிந்த கார்முகங் குனித்தனன் பனித்தனர் வானோர். (உ௩௨)

குனித்த சாபத்தி னூறுநூ றாயிர கோடி
நுனித்த வச்சிர நொறிலுடைப் பகழிக ளூக்கித்
தனித்து நேர்ந்தவன் விடுத்திடு சரமெலாந் தடிந்து
துனித்தி டக்கணை யாயிர மழுத்தினன் றோண்மேல். (உ௩௩)

தோளி லாயிரம் வெங்கணை யழுத்தலுந் தோலாக்
கோள ரித்திறற் பேரினன் கோமகன் றுரந்த
வாளி யாவையும் விலக்கியே யாங்கவன் மருமஞ்
சாள ரம்படச் செறித்தன னாயிரஞ் சரங்கள். (உ௩௪)

சரங்க ளாயிர மகலமே லழுத்தலுந் தகுவ
னிரங்கி நோயுழந் தாற்றவு முனிவுசெய் திவனைக்
கரங்கொள் வில்லினால் வெல்லரி தாமெனக் கருதி
புரங்கொள் விண்டுவின் படைக்கலந் தனையெடுத் துய்த்தான். (உ௩௫)

நார ணன்படை யாங்கவ னுருக்கொடு நடந்து
வீர கோளரி விடுத்திடு சரமெலாம் விழுங்கிப்
பாரு மண்டமு நடுக்குற விடிக்குரற் பகுவாய்க்
காரி ரிந்திட வார்ப்பொடு கடிதுசென் றதுவே. (உ௩௬)

விண்டு வின்படை யணுகலும் விறலரி யதனைக்
கண்டு மால்படை யெடுக்குமு னப்படை கடிதாய்
வண்டு லாந்தொடை மார்பிடம் புகுந்துமன் னுயிரை
யுண்ட தில்லையா லவசமாக் கியதவ னுணர்வை. (உ௩௭)

அண்ண லேந்திடும் வேற்படை யாணையா லனையா
னுண்ணி லாவுயிர் கொளவஞ்சி யெருவைவீ ருண்டு
கண்ண னூர்படை சிறிதுதன் வன்மையுங் காட்டித்
துண்ணெ னப்பின்னர் மீண்டது சூர்மகன் றன்பால். (உ௩௮)

மீண்ட காலையில் வீரகோ ளரியவண் வீழ்ந்து
மாண்டு ளானென மயங்கின னங்கது வயமார்த்
தாண்ட னென்பவன் கண்டுதன் றனிச்சிலை குனித்து
மூண்ட செற்றமொ டணுகினன் கதிர்ப்பகை முன்னர். (உ௩௯)

ஓங்கல் வாகுடை வீரனேர்ந் திடுமுனெண் கையிற்
றாங்கும் வில்லினை யவுணனோ ராயிரஞ் சரத்தா
லாங்க னந்துணித் தாயிரங் கணைநுத லழுத்த
வேங்கி னூர்சுர ரனையன்வே றொருசிலை யெடுத்தான். (உ௪0)

எடுத்த கார்முகம் வாங்குமுன் னிரவியம் பகைஞன்
றொடுத்து நூறுகோ லதனையு மோரிரு துணியாப்
படுத்தொ ராயிரம் பகழியாற் றேரொடும் பரியை
முடித்து வாளியோ ரேழுநூ றுய்த்தனன் மொய்ம்பில். (உ௪௧)

தேர ழிந்திடச் சிலையது மழிந்திடத் திறல்சேர்
பேர ழிந்திடத் தனிமையாய் நின்றவன் பிரியா
வூர ழிந்திட வறியனும் பரிதிபோ லுற்றுன்
கார ழிந்திட வார்த்தனன் கிளர்ந்தெழுங் கதத்தான். (உ௪௨)

பராக மாப்புவி யகழ்ந்திடு பணைமருப் பிரட்டை
வராக மாயிரத் தாற்றல்பெற் றுடையசூர் மகன்மேல்
விராக நெஞ்சுடை விறற்கதிர் பாய்ந்தனன் விண்மே
லிராகு வின்மிசைத் தினகரன் வாவினு னென்ன. (உ௪௩)

பாய்ந்து திண்டிறல் வெய்யவன் வெய்யவன் பகைஞ
னேந்து வார்சிலை பறித்திரு துணிபடுத் தெறிய
வேந்தன் மாமகன் வெண்டுதன் மருங்கிடை விசித்த
நாந்த கம்முரீஇக் குற்றினன் மருமத்தி னடுவண். (உ௪௪)

வீர வெய்யவ னுரமிசைச் செலுத்திய வெங்கட்
கூரும் வாட்படை வாங்குமுன் னுங்கவன் குருதி
சூரி யன்பகை யகலம்வந் துற்றது தூயோன்
றூரை வாளொன்று மாறுபோய்க் குற்றிய தகவின். (உ௪௫)

குற்றி வாங்குமுன் வீரமார்த் தாண்டனுங் கொதித்துக்
கற்றை வெஞ்சுடர்ச் சுரிகையை மருங்குறை கழித்து
மற்ற வன்மணி மார்பத்து வயிரவான் கவச
மிற்றி டும்படி குற்றினன் யாவரு மிரங்க. (௨௪௬)

இளைத்தி டுந்திறல் வெய்யவன் குற்றலுங் கேடு
விளைத்த சூர்மகன் றன்னுடைச் சுரிகையான் மீட்டுங்
குளத்தின் மூழ்குறக் குற்றின னன்னதோர் குற்றிற்
களைத்து வீழ்ந்தனன் கால்பொர மறிந்தகற் பகம்போல். (௨௪௭)

தாழ்ந்த சோரியு மலக்கணும் பெருகுறத் தடந்தேர்
வீழ்ந்த வன்றனை விளிந்தன னிவனென விடுத்துத்
தாழ்ந்த தோர்பெருந் தனுவினை யெடுத்துழி தன்னிற்
சூழ்ந்த தானையோ டேற்றனன் சூரியன் பகைஞன். (௨௪௮)

ஏற்று நேர்வரு சூரன்மா மதலையை யெதிர்ந்து
போற்ற லார்புகழ் வீரராக் கதனெனும் பொருநன்
காற்றின் வந்தனன் றுணைவர்க டொலைந்ததுங் கண்டான்
சீற்ற முள்ளுற நிமிர்ந்தெழக் குனித்தனன் சிலையை. (௨௪௯)

சிலைகு னித்தொரு பத்துநூ றயிற்கணை தெரிந்தே
யொலியு டைக்கழற் சூரன்மா மதலைமே லுய்ப்ப
விலகி யத்தொகைப் பகழியா னம்பிதன் வியன்றோ்
வலவ னைத்தலை துணித்தனன் வாளிநூ றதனால். (௨௫௦)

நூறு வாளியாற் சூதன்மாண் டிடுதலு நொடிப்பில்
வேறோர் பாகனை வீரராக் கதனிரீஇ வெகுளா
வாறு மாமுக னடியினைந் தாயிரங் கணையாற்
கூறு செய்தன னவுணர்கோன் குருமணி மகுடம். (௨௫௧)

உவமை நீங்கிய வைவகைத் தாயவேற் றருவின்
மவுலி யிற்றிடத் திருவின்றி மன்றநா ணெய்தி
யவதி யில்லதோர் பெருஞ்சின மூண்டெழ வவுணன்
குவடி லாமணிக் குன்றுபோ னின்றனன் குறுகி. (௨௫௨)

மணியி ழந்திடு மரவுபோற் கதிரிலா வான்போற்
பணியி ழந்திடுங் கற்பகப் பழுமரந் தனைப்போற்
றுணைம ருப்பினை யிழந்திடுந் தந்திபோற் றொல்லை
யணியி ழந்திடு மகளிர்போ லழகில னானான். (௨௫௩)

இற்றொ ழிந்திடு மகுடநீத் தேவல ரளித்த
கற்றை யொண்சுடர் மவுலியொன் றினைமுடி கவித்து
வெற்றி வீரராக் கதன்விடு சரமெலாம் விலக்கி
மற்ற வன்சிலை துணித்தனன் வாளியா யிரத்தால். (௨௫௪)

ஆடல் வெஞ்சிலை யறுத்தலும் வயமுடை யரக்க
னாடி யோர்தனு வெடுக்குமுன் னிளங் கதிரை
வீட ருங்களை யிட்டவன் விசிகமா யிரத்தாற்
பாடு செய்தன னனையவன் றனதுதேர்ப் பரியை. (௨௫௫)

மாய்ந்து மாத்தொகை படுதலும் வீரனோர் மணித்தேர்
பாய்ந்த காலையி லிரவிமாற் றலனவன் பாணி
யேந்து வில்லினை யாயிரம் பகழியா லிறுப்ப
வேந்தன் மாமகன் றன்மிசை யயிலொன்று விடுத்தான். (உ௫௬)

விடுத்த வேலினை நூறுகோ றொடுத்தவன் வீட்டத்
திடத்தின் மேற்படு வீரராக் கதனது தெரிந்து
தடத்த தேரினு மிழிந்ததை கூவியே தனிபோ
யெடுத்தெ றிந்தனன் பானுகோ பன்றனி யிரதம். (உ௫௭)

எறியு மெல்லையிற் றகுவர்தங் குரிசில்விண் ணெழுந்து
வெறிகொள் பங்கயத் தண்ணன்முன் கொடுத்ததோர் வேலைச்
செறுந னுவியை யுண்கென விடுத்தலுஞ் சென்று
விறல ரக்கன்மேற் பட்டதங் கனையனும் வீழ்ந்தான். (உ௫௮)

தரையில் வீழ்ந்திடும் வீரராக் கதனனி தளர்ந்தான்
முருக னுணையாற் போந்தில தவனுயிர் முன்ன
மிரவி யம்பகை திகிரியின் மறிந்துளா னெழுந்து
பொருதல் வன்மையின் முகியே யிடைந்துபின் போனான். (உ௫௯)

போன காலையில் வேறொரு தேரிடைப் புகுந்து
பானு மாற்றலன் வணக்கியோர் கார்முகம் பற்றி
யூனு மாவியுங் கவர்ந்திடு சரமழை யோச்சி
யேனை வீரர்க டம்மையும் வெல்லுமா றெதிர்ந்தான். (உ௬0)

வீர வந்தகன் வீரமா மகேச்சுரன் வீர
தீரன் வீரமா மகேந்திரன் றிறற்புரந் தரனு
னேரி லாரிவ ரைவருஞ் சிலைகொடு நேர்ந்து
சூரி யன்பகை வன்மிசைக் கணைமழை சொரிந்தார். (உ௬௧)

சொரிந்து வேறுவே றளவையி லாதபோர்த் தொழிலைப்
புரிந்து பின்னுறச் சூர்மகன் சரங்கண்மெய் புதைய
வருந்தி நின்றன ரிருவர்கண் மறிந்தன ரொருவ
ரிரிந்து தேர்சிலை யழிந்துகொங் தேகின ரிருவர். (உ௬௨)

வேறு.

சாற்று மித்திறம் வீரர்கள் யாரையுந் தனிமைந்தன்
வீற்று வீற்றம ராடியே வென்றிகொண் டிடும்வேலை
யாற்ற லின்றிமுன் பின்றிய வவுணர்தா னைகண்முற்று
நாற்றி சைக்கணும் வந்தவன் றவனைநண் ணியவன்றே. (உ௬௩)

பின்று சேனைகள் யாவையுந் தன்னயற் பெயர்த்தும்வந்
தொன்ற வேயிர வியம்பகை வருதலு முதுகண்டா
னன்று நன்றிவ னுற்றலின் றிறமென நகைசெய்தா
னென்று நந்திதன் கணத்தரிற் றலைமைபெற் றிருக்கின்றான். (உ௬௪)

வாகை மொய்ம்புடை மேலையோன் மாலயன் றனக்கெட்டா
வேக நாயகன் றிருமகன் றாளிணை யினிதுன்னி
யோகை யானனி வழுத்தியே போர்த்தொழி லுளங்கொண்டு
சேகு நெஞ்சுடைப் பானுகோ பன்முனஞ் செலலுற்றான். (உ௬௫)

அரியு நான்முகத் தொருவனுங் குனித்திட வறத்தேவுஞ்
சுருதி மாமறைத் தொகுதியுங் குனித்திடச் சுரர்கோவு
மிரவி யண்ணலு மதியமுங் குனித்திட விகலாடற்
றிருவு மோடியுங் குனித்திடக் குனித்தனன் சிலைதன்னை. (உசு௬)

விசையெ டுத்திடு மூதையும் வடவையும் வெருக்கொண்டு
வசையெ டுத்திட வளக்கருந் தம்மொலி வறிதாகத்
திசையெ டுத்திடு மண்டமும் புவனமுஞ் சிதைந்தேமா
றிசையெ டுத்திட வெடுத்தனன் சிலையினு ணிசைதன்னை. (உசு௭)

நாணொ லிக்கொடு வெஞ்சமர் புரியமே னடப்பானைக்
காண லுற்றனன் றினகரற் சினவிய கதக்கண்ணு
னேனு டைப்பெருங் கார்முக மொன்றுவே றெடுத்திட்டான்
சேணி லத்தவர் பனித்திடக் குனித்தொலி செய்திட்டான். (உசு௮)

முன்பு திண்டிறல் வாகுவின் வாகுவின் முழக்கத்தை
யன்பி னுடிய வமரர்க ளளவைதீர் மகிழ்வெய்திப்
பின்பு சூர்மகன் சிலையொலி கேட்டலும் பேதுற்றே
யின்ப துன்பங்க ளொருவழிக் கண்டன மிவணென்றார். (உசு௯)

புகழ்ச்சி மேலவன் குணத்தொலி செவிக்கொடு பொலிந்தோர்க
ளிகழ்ச்சி மிக்கவன் குணத்திசை கேட்டலு மிரங்குற்றார்
திகழ்ச்சி யாரமு துண்டவர் நஞ்சமுண் செயல்போன்றார்
மகிழ்ச்சி யீற்றினிற் றுன்புவந் தடைவதோர் வழக்கன்றே. (உ௭௦)

மாய னுன்முகன் மகபதி முதலிய வானோர்கள்
காயம் யாவினு நிரந்தன ரமர்த்தொழில் காண்பாரா
யாய போழ்தினிற் சூரபன் மாவரு ளசுரேசன்
றாய வன்றனை நோக்கியே யினையன சொல்கின்றான். (உ௭௧)

கோதை வேலினுற் றாரகன் றனையடு குகனல்லை
யாதி யேனமாய்ப் புவியினைக் கிளைத்திடு மரியல்லை
வேத நான்முகத் தவனல்லை விண்ணுளோர் வேந்தல்லை
தூதனாகிய நீகொலென் னெதிர்பொருந் தொழில்வல்லாய். (உ௭உ)

இழைத்த மாயையான் முற்பகற் போந்தனை யெங்கோன்முன்
பழித்தி றஞ்சில கூறினை யிளவலைப் படுத்திட்டா
யழித்தி மாநகர் யானஃ துணர்ந்தில னதனாலே
பிழைத்தி யன்றெனி னுய்ந்திவண் வந்திடப் பெறுவாயோ. (உ௭௩)

பொருது வென்றிகொண் டுனதுயிர் நமனூர் புகுவிப்பன்
சரத மிங்கிது பிறந்திடு மளவையிற் றழல்காலும்
பரிதி யைச்சிறை பிணித்தவ னெற்றனைப் படுத்தானென்
றொருத னிப்பழி கொள்வதல் லாற்புக ழுறுவேனோ. (உ௭௪)

முனைமு டித்தநின் றுணைவரை வென்றனன் முரட்பூதந்
தனைய டர்த்தனன் சிந்தின னனிகமுந் தனிநேர்ந்த
வுனைமு டிக்குவ னுனைவிடுத் தோனையு முலைவித்தென்
சினமு டிக்குவன் மகபதி தன்னையுஞ் சிறைசெய்வேன். (உ௭௫)

என்ற காலையில் வீரவா கியம்புவா னெவரேனுஞ்
சென்று போர்புரி வார்தமை வெல்வதே திறலாகும்
பின்று வார்தமை யடுவதே வசையலாற் பிறிதுண்டோ
வென்றி யெய்துவா ருரைப்பரோ போர்புரி விரைந்தென்றான். (உ௭௬)

வேறு.

என்னு மாத்திரத் திரவியம் பகைஞனீ ரைந்து
பொன்னெ டுங்கணை யெடுத்துவார் சிலையிடைப் பூட்டி
மின்னு வாமென விடுத்தலும் வீரனும் விரைவி
லன்ன வீரைந்து வாளிதொட் டவற்றினை யறுத்தான். (உ௭௭)

ஆறு நாலுவெம் பகழியு மறுத்தபின் னறிஞு
னூறு வாளிகள் விடுத்தலும் வந்தது நோக்கி
வீறு மத்தொகைச் சரங்கள்விட் டவையிடை வீட்டி
யீறி லான்மகன் மீதிலா யிரங்கணை யெய்தான். (உ௭அ)

ஆயி ரங்கணை தூண்டிமற் றவற்றினை யறுத்துத்
தூய வன்பதி னாயிரஞ் சுடுசரந் துரப்பத்
தீய னத்தொகை வாளியா லங்கவை சிந்தி
யேயெ னக்கொடும் பகழிநூ றாயிர மெய்தான். (உ௭௯)

உய்த்த வாளிநூ றாயிரந் தன்னையு முரவோ
னத்தொ கைப்படு பல்லவந் தூண்டியே யறுத்துப்
பத்து நூற்றின்மே லாயிரம் பெற்றிடும் பகழி
மெய்த்த முற்கதி ரிரவியம் பகைஞன்மேல் விடுத்தான். (உஅ0)

விடுத்த வாளியைப் பத்துநூ றாயிரம் விசிகந்
தொடுத்து மாற்றியே சூரபன் மாவரு டோன்ற
லெடுத்து நூறுநூ றாயிரம் புங்கவ மேவ
னொடிப்பில் வீட்டின னனையன சிலீமுக நூக்கி. (உஅக)

வஞ்ச னேவினை மாற்றியே யெம்பிரான் மதலை
செஞ்ச வாளிநூ றாயிர கோடிகள் செலுத்தக்
கஞ்ச மாமக னுயிர்த்திடு திருமகன் கணிப்பில்
புஞ்ச வார்கணை யிறுதிநாண் முகிலெனப் பொழிந்தான். (உஅஉ)

பார்ம றைந்தன திசையெலா மறைந்தன படர்முந்
நீர்ம றைந்தன குலகிரி மறைந்தன நிலவுங்
கார்ம றைந்தன ககனமு மறைந்தன கதிரோன்
றேர்ம றைந்தன விருவர்தங் கணைமழை செறிய. (உஅ௩)

பாரி வட்டமு மாதிர வட்டமும் பரவை
வாரி வட்டமு நேமியின் வட்டமு மலிவான்
மூரி வட்டமு மண்டத்தின் வட்டமு முடுகிச்
சாரி வட்டமாய்த் திரிவன வனையவர் தடந்தேர். (உஅ௪)

மாறில் வாளிகண் முறைமுறை சொரிதலான் மறைவ
றீறு செய்தவை யகற்றுழித் தோன்றுவ ரிமைப்பில்
வேறு வேறதா யித்திற நிகழ்த்திடும் வீரர்
சூறை போலம ராடின ருலகெலாஞ் சுற்றி. (உஅ௫)

இரவி வானவன் றனதுதிண் டேரினு மீர்க்கும்
புரவி மீதினும் முடிபதி மானத்தும் புறஞ்சூழ்
கரிகண் மீதினும் விண்ணுலா வமரர்தங் கண்ணும்
பொருவி லாளியர் விடுகணை சிதறியே போமால். (உஅரு)

செங்கண் வீரர்க ளிருவரும் பொருவதித் திசையென்
றங்கு நாடரி தவர்விடும் பகழிக ளனந்த
மங்குல் வானெலா நிரந்தன மிசையினும் வருமா
லிங்கு நிற்கரி தெமக்கென வோடின ரிமையோர். (உஅஎ)

புடவி கீழ்வன வண்டங்க டுளைப்பன புறத்திற்
கடலொ ரேழையும் பருகுவ புவனங்கள் கடப்ப
வடலின் மேதக்க யாவருந் தடுத்திடற் கரிய
வடவை நாவையுந் துணிப்பன வவர்விடும் வாளி. (உஅஅ)

இகல்க டந்திடு திண்டிறல் வாகுவு மிரவிப்
பகையு மாற்றிய பெருஞ்சமர் வலியையார் பகர்வார்
மிகுதி கொண்டபல் கணைமழை யுலப்புறு விடுப்பத்
திகிரி யம்படை போன்றன வனையர்கைச் சிலைகள். (உஅகூ)

வெய்ய வன்றனைத் தளையிடும் வெய்யவன் விறலார்
துய்ய மொய்ம்பினன் விடுசர மாரியைத் தொலைத்துக்
கையி ருந்திடு கார்முக மொன்றையுங் கடிதி
னையி ரண்டுறு மயிற்கணை யாலறுத் தார்த்தான். (உகூ0)

ஆர்த்த காலையில் வீரவா குப்பெய ரறிஞன்
பேர்த்து மோர்தனு வாங்கியே பெருஞ்சினம் பிடித்துச்
சூர்த்த வெங்கணை யாயிரம் விரைவினிற் றூண்டி
மூர்த்த மொன்றினி லவுணனேந் தியசிலை முரித்தான். (உகூக)

முரித்த காலையி னவுணர்கோ னுற்றவு முனிந்து
கரத்தின் மற்றொரு சிலைகுனித் தாயிரங் கணைக
ளுரத்தி னம்பியு மணங்குற விடுத்தலு மோரேழ்
சரத்தி னுலவன் றனிப்பெரு மவுலியைச் சாய்த்தான். (உகூஉ)

வாய்த்த பன்மணி குயிற்றிய கனகமா மவுலி
சாய்த்த காலையின் வேறொரு கதிர்முடி தன்னை
யேத்தல் சான்றிடு சூர்மகன் புனையுமா றெடுத்தான்
பூத்த செங்கதி ரவனைமுன் பிடித்தவா போல. (உகூங)

எடுத்த பொன்முடி சென்னியிற் கவித்தன னிதன்முன்
வடித்த வெங்கணை யாயிரந் தூண்டிமற் றவன்மே
லடுத்த சாலிகை சிந்தினன் சிந்திய வளவி
னடித்து நல்லறம் பாடின பரிதியு நகைத்தான். (உகூச)

நிருதர் போற்றிடு சூர்மக னுயிர நெடுங்கோல்
சுருதி நாயக னிளவறன் னுதலிடைத் துரப்பக்
குருதி நீருண்டு குழுவொடுந் தோன்றுவ குணபாற்
பரிதி வானவ னிளங்கதிர் விரிந்தெழும் பரிசின். (உகூரு)

நெற்றி மீதுகோ லாயிரம் படுதலு நிறையிற்
சற்று நீங்கிலன் றன்வலி சுருங்கிலன் றக்கோன்
பற்றி யங்கையாற் பறித்தவை வீசினன் பகைஞன்
கொற்ற வெய்யகோல் விளிவின்றி நின்றிடுங் கொல்லோ. (௨௯௬)

சகத்தை நல்கிய வறுமுகற் கிளவலத் தருவன்
முகத்தி னுயிர மகலத்தி னுயிர மொய்ம்பி
னகத்தி னுயிரங் கரங்களி னுயிர மாக
மிகைத்த வெங்கணை தெரிந்தொரு தொடையினில் விடுத்தான். (௨௯௭)

விட்ட வாளிகள் சூர்மக னவயவம் விரவிப்
பட்டு மூழ்கலு மவசமாய்த் தளர்ந்தனன் பாணி
நெட்டி ருஞ்சிலை யூற்றமாய் வறியனாய் நின்றான்
றொட்ட தெண்கயத் தூறிமே லெழுந்தது சோரி. (௨௯௮)

வந்து வந்தெழு குருதிநீர் முழுதுடன் மறைப்பப்
புந்தி தன்னிடைச் சீற்றமு மூண்டெழப் பொலிவான்
செந்த முற்பிழம் பானுயர் குன்றெனத் திகழ்ந்தா
னந்தி மேற்றிசை யெழிலியின் வண்ணமு மானான். (௨௯௯)

ஆன போழ்தினி லவுணமாத் தலைவர்கள் யாரும்
பானு மாற்றலன் பொருவலி யின்மையைப் பாராச்
சேனை நாற்பெரும் பரவையி னோடுமுன் சென்று
மான வேற்படை வீரவா குவின்புடை வளைத்தார். (௩௦௦)

இலைபி றங்கிய சூலம்விட் டேறுதண் டெழுவ
முலைபி றங்கிய கணிச்சிநே மிப்படை யோங்குஞ்
சிலைபி றங்கிய பகழிகள் வீரன்மேற் செலுத்தி
மலைபி றங்கிய விரவிசூழ் திமிரென *மறைத்தார். (௩௦௧)

வேறு.

தொடைக்கல னிலவு மார்பிற் றெல்லசு ரேசர் கொண்ட
படைக்கல மான வெல்லாம் விடுத்தலுந் தனது பாணி
யிடைக்கலந் திருந்த வார்விற் குனித்தன னிடுக்கட் பட்டோ
ரடைக்கலம் புகுதும் வெள்ளி யருவரை யளித்த வண்ணல். (௩௦௨)

ஆயிர கோடி கோடி யடுசரந் தொடையொன் றாக
மாயிரும் புயத்து வள்ளல் வல்லையின் வலிது தூண்டித்
தீயவ ருடன்று விட்ட படையெலாஞ் சிந்த லுற்றான்
பாயிருட் படலங் கீறுஞ் செங்கதிர்ப் பரிதி யேபோல். (௩௦௩)

அவுணர்கள் யாரு முய்த்த வடுபடை மாரி சிந்திக்
குவவுறு விசயத் தோளான் கொடுஞ்சர மனந்த கோடி
தவறில வாக வுய்த்துத் தருவர்தந் தானை முற்று
முவரியுண் வடவை போல வொல்லையின் முடிக்க லுற்றான். (௩௦௪)

தோலினை யறுக்கும் வாளைத் துணித்திடுஞ் சோதி வில்லின்
காலினை யறுக்கும் வெய்ய கணிச்சியை யறுக்கும் வீசுங்
கோலினை யறுக்கு நேமிக் கொடும்படை யறுக்குங் காமர்
வேலினை யறுக்கு மம்மா விடலைதன் வீர வாளி. (௩௦௫)

வேறு.

உரந்துணிக்குங் கவசமிடு முரந்துணிக்கும் புயந்துணிக்கு மொன்ன லார்தங்
கரந்துணிக்கு மடல்புரிமோ கரந்துணிக்குங் கழறுணிக்குங் கணிச்சி கைத்தோ
மரந்துணிக்குங் குனித்தகொடு மரந்துணிக்கும் வாய்துணிக்கு மவுலி தாங்குஞ்
சிரந்துணிக்கு மெறிந்திடும்வச் சிரந்துணிக்கு முரவோன்றன் செங்கை வாளி.

கதமறுக்கும் வதமறுக்குந் தூங்குபுழைக் கையறுக்குங் கபோலத் தூறு
மதமறுக்கு நுதலறுக்கும் வாயறுக்குஞ் செவியறுக்கும் வயிரக் கோட்டின்
விதமறுக்கும் வாலறுக்கு மெய்யறுக்குந் தலையறுக்கும் வேழஞ் செல்லும்
பதமறுக்கு முரணறுக்கு மரணறுக்கும் வீரன்விடு பகழி மாரி. (௩௦எ)

ஆரறுக்குஞ் சகடறுக்கு மச்சறுக்கு நெடுந்துவச மறுக்குந் தேரின்
பாரறுக்குங் கூம்பறுக்கும் பாகறுக்கு மங்கணுறும் பதக ராவி
வேரறுக்கு மடியறுக்கும் விரிசருகொய் யுளையறுக்கும் விளங்குஞ் செம்பொற்
றாரறுக்கும் புரவிகளின் றலையறுக்கு நிலையறுக்குஞ் சரங்கண் மன்னே.

கானொடும் வரையோடுங் கரையோடுந் திரையோடுங் கழியி னோடு
மீனொடுங் கடலோடும் விசையோடுந் திசையோடு மேக மோடும்
வானொடு நிலனொடு மிருகதிரின் மருங்கோடும் வாளத் தோடுந்
தேனொடும் பூந்தாரான் சிலையோடு நெடும்பகழி சிந்துஞ் சென்னி. (௩௦௯)

வேறு.

பாயிரும் புனல்போ லோடிப் படியெனப் பரந்து நீடித்
தேயுவின் றிறன்மேல் கொண்டு சேணென முடிவின் றாகி
வாயுவின் விரைந்து சென்று வள்ளல்கை வாளி யோவ்வொன்
றுயிர கோடி சென்னி யறுக்கினும் வெறுக்கி லாவே. (௩௧௦)

வரந்தனிற் றலைமை சான்ற வொருசில மான வீரர்
சிரந்தனைத் துணித்துக் கொண்டு சீர்கெழு சூரன் வைகும்
புரந்தனிற் கொடுபோ யன்னார் பொற்றொடி மடந்தை மார்தங்
கரந்தனி னுகுத்துச் செல்லுங் கந்தனுக் கிளவல் வாளி. (௩௧௧)

புரண்டன வயவர் யாக்கை பொழிந்தன குருதித் தாரை
யுருண்டன மான்றே ராழி யுலவின பலவுங் கூளி
திரண்டன குணங்க ரீட்டஞ் செறிந்தன சேனம் பிள்ளை
யிருண்டன திசைகள் முற்று மிரிந்தன வொழிந்த தானை. (௩௧௨)

பட்டன புரவிப் பந்தி படிந்தன முடிந்த வேழங்
கெட்டன ரவுணர் யாருங் கிடந்தன வொடிந்த திண்டே
ரட்டன றெருவ னின்று னகலிரு விசும்பை வல்லே
தொட்டன பிணத்தின் பொம்மல் சோரியா றெழுகிற் றன்றே. (௩௧௩)

பாய்ந்திடு குருதி நீத்தம் படர்ந்தது புகுந்து பௌவஞ்
சேர்ந்தது சுறவு மாந்திச் செருக்கிய திறலோ னம்பால்
வீந்திடு மவுண ராவி விடுத்தனர் சென்று தந்தா
ளோய்ந்தனர் நடுவன் றூத ரொழிந்தன கழிந்த பூசல். (௩௧௪)

சிந்திய வவுணர் தானைச் செய்தியும் பரிதிக் கூற்ற
னெந்தனன் றமிய னின்ற தன்மையு நோக்கி நோக்கி
நந்தம தண்ண றன்பா னண்ணுது மென்னா மீண்டு
வந்தன முந்து சாய்ந்த வயப்பெரும் பூத வெள்ளம். (௩௧௫)

இரிந்திடு பூத வீர ரியாவரு மீண்டார் நின்று
வருந்திய தலைவர் தொல்லை வன்மிடல் பெற்று ரங்க
ணருந்துய ருழந்து வீழ்ந்தா ராவியோ டெழுந்தா ரின்னோர்
பொருந்தனி வீர வாகுப் புடையுற வளைந்து புக்கார். (௩௧௬)

அங்கது போழ்து தன்னி யனர்வுயிர்த் துணர்வு தோன்றச்
செங்கதி ரோனைச் சீறுஞ் சேவகன் சற்று நோக்கிச்
சங்கையி னிமிர்ந்த கொள்கைத் தன்பெருஞ் சேனை காணுன்
கங்கமுங் கழுகு மார்க்குங் களேபரச் சூழல் கண்டான். (௩௧௭)

நேருறு தனிவில் லாளி நின்றது நோக்கி நம்பாற்
சாருறு மனிக மெல்லாந் தடிந்தன னிவனென் றுன்னி
யாரிடை யடங்கிற் றம்மா வாண்மைக்கு மவதி யுண்டோ
வீரன்மற் றிவனே யல்லால் வேறிலை போலு மென்றான். (௩௧௮)

இனையன வியந்து பின்னு மென்னெதிர் பொருத வீர
ரனைவரும் விளிந்தோ ரன்றி யடல்வலி படைத்தோ ரில்லை
குனிசிலை யொருவ னின்றான் கொற்றமுற் றிடுவ னம்மா
தினகரன் பகைஞ னாற்றல் சீரிது சீரி தென்றான். (௩௧௯)

கன்னலொன் றளவை தன்னிற் கந்தவே ளொற்றன் யாக்கை
சின்னபின் னங்க ளாகச் செய்குவன் செய்தி டேனேற்
பின்னுயிர் வாழ்க்கை வேண்டேன் யான்பிறந் தேனு மல்லே
னென்னொரு சிலையும் யானு மெரியிடைப் புகுவ னென்றான். (௩௨௦)

வஞ்சின மினைய கூறி மாதிரக் கிழவன் மைந்த
னெஞ்சினில் வெகுளித் தீயு மானமு நீடி யோங்க
வெஞ்சலி லீசன் முன்ன மேகிய கொடுநெஞ் சென்னச்
செஞ்சிலை வீரன் முன்னந் தேரொடுஞ் சென்று சேர்ந்தான். (௩௨௧)

கைத்தலத் திருந்த தொல்லைக் கார்முகம் வளைய வாங்கி
முத்தலைப் பகழி யங்கோ ராயிரம் விடுப்ப மொய்ம்ப
னத்திறத் தியன்ற வாளி யாயிரஞ் சிலையிற் பூட்டி
யுய்த்தன னறுத்துப் பின்னு மொராயிரஞ் சரங்கள் விட்டான். (௩௨௨)

அற்றது தெரிந்து தீயோ னாயிரம் விசிகந் தூண்டி
மற்றவை விலகிப் பின்னும் வாளியோ ரயுதந் தொட்டுக்
கொற்றவன் றேரும் பாகுங் குரகதக் குழுவு மாயச்
செற்றன னதனை நோக்கிச் சேனுளா ரலக்க ணுற்றார். (௩௨௩)

வில்லொடும் வீர வாகு வேறொரு தேர்மேற் பாய்ந்து
வல்லிதி னூற்று நூறு வாளிக டுரந்து வெய்யோன்
சில்லியந் தேரு மாவும் வலவனுஞ் சிலையும் வீழப்
பல்விருந் துண்டஞ் செய்தான் விண்ணவர் பண்ணை யார்ப்ப. (௩௨௪)

பூங்கழன் மிழற்ற வேறோர் பொன்னவாந் தேரின் மீப்போ
யாங்கொரு சாபம் பற்றி யவுணன்றன் செவியின் காறும்
வாங்கின னேழு நூறு வச்சிரப் பகழி பூட்டி
யோங்கலம் புயத்து வீர னுரத்திடைப் புகவுய்த் தார்த்தான். (௩௨௫)

ஆகத்திற் பகழி பாய வறுமுகன் றாதன் முன்னஞ்
சோகத்தை யுணர்கி லாதோன் றுயரத்தின் சுவையுங் கண்டு
மாகத்தி லிரவி தன்னை வன்சிறை பிணித்தோன் சென்னி
காகத்துக் கிடுவ னென்னா வெகுண்டனன் காலன் போல்வான். (௩உசு)

கறுத்திடு வீர னீரேழ் கங்கபத் திரங்க ளேவி
யறுத்தனன் சிலையைப் பின்னு மாயிரம் பகழி தூண்டி
நொறிற்பரி யிரதந் தன்னை நூறின னாறு கோலான்
மறுத்தெதிர் பொருத தீயோன் மருமத்தை வாயில் செய்தான். (௩உஎ)

வருந்தில னதற்கு மைந்தன் வயினுறு மிரத மொன்றின்
விரைந்துடன் புகலும் வீரன் விசிகமா யிரத்தைத் தூண்டி
யுரந்திறந் திட்ட வாற்றா லோச்சியே புறத்திற் றாங்கு
மரந்திகழ் பகழித் தூணி துணிபட வறுத்தா னன்றே. (௩உஅ)

தூவுறு பகழி தூர்க்குந் தூணியிற் றிடலு நேமிக்
காவலன் றனய னம்மா கார்முக விஞ்சை தன்னான்
மேவலன் வென்றி கோட லரிதென வினைய முன்னித்
தேவர்தே வுதவு மோகப் படையினைச் செங்கை கொண்டான். (௩உகூ)

சிந்தனை கவரு மோகத் தீப்படை யவுணன் செங்கை
வந்திட வனைய போழ்தின் மனத்தினால் வழிபா டாற்றி
வெந்திற லனிகத் தோடு மேவலன் றன்னை யெய்திப்
புந்தியை யழித்து வீட்டி வருகெனப் புகன்று விட்டான். (௩௩0)

விட்டிடு மோக மென்னும் வியன்படை வெகுளி வீங்கித்
தட்டுடை நெடுந்தேர் வெய்யோன் றன்பெருஞ் சுடர்கண் மாற்றி
நெட்டிருப் படலை வீசி கிரந்தபல் லுயிரு மஞ்சி
யுட்டெளி வகன்று மாழ்க வொல்லெனப் பெயர்ந்த தன்றே. (௩௩க)

பெயர்ந்திடு மோக நாமப் பெரும்படை யூக்க நோக்கித்
துயர்ந்தனர் வெருவி யாற்றத் துளங்கினர் துணுக்கென் றுள்ள
மயர்ந்தனர் பூதர் யாரு மவ்வவர் தலைவ ரானோர்
சயந்தனை யிழந்து நின்று சாம்பினர் தேம்பு கின்றார். (௩௩உ)

வேறு.

மோகப் படைசே றலுமுந் தெதிர்மா
றேகப் படையோன் றையுமே வுகிலார்
சேகப் படையத் தொடைசிந் தினரான்
மாகப் படைமொய்ம் புடைவள் ளல்பினோர். (௩௩௩)

அந்தத் திறல்வெம் படையாற் றவுடன்
வந்துற் றழிமே லவன்மற் றிதுதா
னெந்தப் படையா லழிவெய் துமெனச்
சிந்தித் தனன்வே றொருசெய் கையிலான். (௩௩௪)

ஒன்றா முதலோ னிவையுன் னுதலு
மன்றா லம்வருந் திறனா மெனவே
சென்றா ருணர்வுஞ் சிதைவித் ததுபோர்
வென்றார் புகழ்மோ கவியன் படையே. (௩௩௫)

இலக்கத் துடனெண் மருமே னையரு
மலக்கத் துடன்வீழ்ந் தனர்மாற் றலரூர்
கலக்குற் றிடுகா ளைகருத் தழியா
நிலக்கட் படுகந் தெனநின் றனனால். (நநசு)

நிற்கும் பொழுதத் தினினீ டகல்வா
னற்கும் பரிதிப் பகையங் கதுகண்
டெற்கின் றெதிரா யினர்யா வருளார்
நற்குன் னினனென் றுநகைத் தனனே. (நநஎ)

புகழுற் றிடுமே லவர்புந் தியின்மா
றிகழுற் றிடுபெற் றிதெரிந் தவுணன்
மகிழுற் றுநகைத் துவயம் புனையா
நிகழுற் றிடுசீ ரொடுநின் றனனே. (நநஅ)

மல்வன் மைகொண்மொய்ம் பனுமற் றவருந்
தொல்வன் மையிலா துடல்சோர்ந் தனரால்
வில்வன் மையினு லிவர்வீ டுறவே
கொல்வன் கடிதென் றுகுறித் தனனே. (நநகூ)

வரிநின் றவில்வாங் கினன்வா லுணர்வு
திரிகின் றவன்மேற் சிலைவீ ரர்கண்மேல்
விரிகின் றகணப் படைமேல் விசிகஞ்
சொரிகின் றனன்யாக் கைதுளைத் தனனே. (நச0)

ஆங்கா கியவே லையிலா றுமுகன்
பாங்காம் விறலோ னெடுபா ரிடர்க
ணீங்கா மருண்மால் கொடுநே ரலனுற்
றீங்கா யினதன் மைதெரிந் தனனே. (நசக)

தெரிந்தான் முகமா றுெடுசேர்ந் துயிர்தோ
றிருந்தா ரருள்செய் திடுமெம் பெருமான்
விரைந்தாங் கொரமோ கவியன் படையைப்
புரிந்தா னதனோடு புகன் றிடுவான். (நசஉ)

நன்றே தெளிவுற் றெமர்நண் ணும்வகை
நின்றே திலன்விட் டநெடும் படைபாற்
சென்றே யதன்வன் மைசிதைத் திவணி
வென்றே வருகென் றுவிடுத் தனனே. (நசந)

எண்கொண் டசிவன் மகனே வுபடை
சேண்கொண் டுபடர்ந் திருள்சிந் தையராய்த்
தூண்கொண் டிடுதோ ளவர்துன் னியதோர்
மாண்கொண் டசெருக் களம்வந் ததுவே. (நசச)

மிடல்கொண் டவமோ கவியன் படைசென்
றிடுகின் றுழிவெய் யவனே வுபடை
யடல்கொண் டிடும்வீ ரரகத் திலிரு
ளுடையும் படிவல் லையினே டியதால். (நசரு)

அசைகொண் டவுடுத் திரளான வெலா
மிசைகொண் டவினன் வரவே கியபோற்
றிசைகொண் டிடுநம் மவர்சே னையொரீஇ
யிசைகொண் டவுணன் படைமீண் டதுவே. (ருசசு)

மோகத் தனிவெம் படைமொய்ம் பிலதா
யேகத் திறல்வா குவுமே னையரு
மாகத் தினின்மை யலகன் றமலன்
வாகைப் படைகண் டுமகிழ்ந் தனரே. (ருசஎ)

அழலுற் றதுபோ லவகன் மணியி
னிழலுற் றிடுதேர் மிசையின் றவனு
மெழலுற் றிடுவீ ரர்கள்யா வர்களுந்
தொழலுற் றனர்நின் றுதுதித் தனரே. (ருசஅ)

செயிர்கொண் டகருத் தொடுசெற் றலர்தம்
முயிர்கொண் டிடுவோன் படையூற் றமெலா
மயிர்கொண் டிடவட் டதனுற் றறெரீஇ
மயிர்கொண் டபொடிப் பொடிவாழ்த் தினரால். (ருசகூ)

தீயோன் படைசெய் தசெயற் கையில்யா
மாயோ மருளென் கையகத் தடையா
வாயோ டிரைவீ ரமறுத் தனரா
யேயோ வெனவெள் கினர்யா வருமே. (ருரு0)

அண்டா தவனு லெம்மகத் திலிரு
ளுண்டா கியதன் மையுணர்ந் தறிவன்
விண்டா னுறவிப் படைவிட் டனனென்
றெண்டா வுமுளத் திடையெண் ணினரால். (ருருக)

முந்நான் கெனுமொய்ம் புளமூர்த் திதனை
யுன்னு வருணீர் மையுளத் தடையா
வன்னார் தொழுதேத் தினரத் துணையின்
மின்னு மெனவப் படைமீண் டதுவே. (ருருஉ)

மீண்டுற் றவமோ கவியன் படைபோய்த்
தூண்டுற் றருகன் புடைதுன் னியதா
லாண்டுற் றிடும்வீ ரர்களண் டலன்மேன்
மூண்டுற் றிடுபூ சன்முயன் றனரே. (ருருந)

ஆங்குற் றிடுகா லையடுந் திறலின்
பாங்குற் றிடுமொய்ம் புபடைத் துடையோ
னீங்கற் கருமா னமுநீள் சினமு
மோங்குற் றெழவின் னதையுன் னினனே. (ருருச)

அந்நே ரலனீண் டொரடற் படையான்
முன்னே மயல்செய் தமுரண் டொலைய
வின்னே யடுவே னெனவெண் ணமுருக்
கொன்னே யரன்மாப் படைகொண் டனனே. (ருருரு)

அங்கத் துணைகண் டனனவ் வசுர
னெங்கட் கிறைவன் படையே கியதும்
வெங்கட் படுதன் படைமீண் டதுவுஞ்
செங்கட் டிறலண் ணல்செயற் கையுமே. (௩௫௬)

வேறு.

இம்மெனச் சூர்மக னிவற்றை நோக்குறா
விம்மித மெய்தினன் வீர மொய்ம்புடைச்
செம்மலை யெதிர்ந்திலன் செருக்கு நீத்தனன்
கைம்மிகு துயரினன் கருதன் மேயினான். (௩௫௭)

இவ்விடை யொன்னல ரெண்ணம் யாவையும்
வவ்வினன் மாநில வரைப்பின் வீட்டின
னுய்வகை பெற்றுட னுணர்ந்து தோன்றினார்
செய்வதெ னையகோ கடவுள் செய்கையே. (௩௫௮)

எடுத்தனன் மாற்றல னிறைவன் மாப்படை
தொடுத்திடு வானெனிற் றன்னி யென்னுயிர்
படுத்திடும் யானது பரித்து வந்திலன்
விடுத்துட னப்படை விலக்கும் வண்ணமே. (௩௫௯)

வென்றிட லரிதினி வீர வாகுவைச்
சென்றனன் முதுநகர்த் தெய்வ தப்படை
மன்றவுந் தந்திவன் வன்மை மாற்றுவ
னின்றிடல் பழுதென நெஞ்சி லுன்னினான். (௩௬௦)

அயன்மகன் மதலைசே யருவ மாகியே
வியன்மிகு தனதுதேர் விடுத்து விண்ணெழீஇப்
பயனறு முகிலெனப் படர்ந்து வல்லையி
னயனுறு கடிமதி னகருட் போயினான். (௩௬௧)

கொற்றவன் மறைந்தகல் கொள்கை காண்டலுஞ்
சுற்றுறு தானவர் தொலைந்து போயினா
ரற்றது தெரிந்திடு மமரர் யாவரும்
வெற்றியின் றெமதென விளம்பி யார்த்தனர். (௩௬௨)

மாயையி னருவமாய் வஞ்சன் மாநகர்
போயினன் காலையே புகுவன் போர்க்கினி
யாயவன் றனைவிரைந் தடுதி யென்றுபூத்
தூயினர் வீரன்மேற் சுரர்கள் யாவரும். (௩௬௩)

தினகரன் மாற்றலன் செம்பொற் றேரொரீஇ
யினைவுட னருவமா யிரிந்து போதலை
வினையமொ டோர்வுறா வீர னின்றனன்
முனிவொடு பிழைபடு மூரி யானைபோல். (௩௬௪)

விண்டிடு சூர்மகன் வெருவி வெந்திடல்
கண்டனர் துணைவருங் கணத்தின் வீரருந்
திண்டிற விழுந்தனன் றீயன் பற்றிநாங்
கொண்டணை வாமெனக் கூறன் மேயினார். (௩௬௫)

என்பது விளம்பியே யாரு மார்ப்பொடு
துன்புறு மவுணனைத் தொடர்ந்து பற்றுவான்
முன்பொடு முயறலுந் தெரிந்த மொய்ம்பினன்
றன்புடை யோர்க்கிது சாற்றன் மேயினான். (நூசுசு)

பேடியர் சிறுதொழில் பேணி யுள்வெரீஇ
யோடினன் போகிய வொன்ன லான்றனை
நாடிநா மடுவது நலத்தின் பாலதோ
சாடுவ னினிவரிற் சரதம் யானென்றான். (நூசுஎ)

என்றிவை வள்ளலு மியம்ப யாவரு
நன்றென விசைத்தலு மவற்றை நாடியே
குன்றுறழ் புயத்துணை கொட்டிக் குப்புறீஇ
வென்றிகொள் பாரிட வெள்ள மார்த்தவே. (நூசுஅ)

முற்றிய தமரினி முயல்வ தில்லையாற்
செற்றல னோடினன் றிரும்பும் வீரனு
நிற்றில னினியென நினைந்து நீங்குவா
னுற்றன னுமென விரவி யோடினான். (நூசுசு)

செந்திரு மதுமலர் செறியப் பூத்துழி
முந்துறு நித்தில முழுது மொய்த்தென
வந்தர முழுவது மடைந்த செக்கரிற்
சுந்தர வுடுநிரை பலவுந் தோன்றிய. (நூஎ0)

குண்டுநீர்க் கனலொடு குலாவி மாலுளத்
தெண்டரு தமியரை யிகலி மாமதி
பண்டுள முனிவரர் பரமன் மேல்விடு
வெண்டலை யாமென விண்ணிற் றோன்றினான். (நூஎக)

இத்துணை வேலையி லிலக்கத் தெண்மரா
மெய்த்துணை யார்களும் வெய்ய பூதரு
மத்துணைப் படைகளு மயலிற் சென்றிட
மொய்த்துணை விறலுடை மொய்ம்பன் மீண்டனன். (நூஎஉ)

அந்தமில் கைலையை யருளிற் போற்றிடு
நந்திதன் கணத்தரி னாத னாகியோன்
விந்தைகொள் செருநில மொருவி மீண்டுபோய்க்
கந்தவேள் பாசறைக் கண்ணு ணண்ணினான். (நூஎங)

நண்ணிய திறலினா னன்மு கன்முதற்
புண்ணிய மேலவர் போற்ற வாண்டுறு
கண்ணுத லருள்புரி கந்தன் முன்புபோய்த்
துண்ணென வணங்கினன் றுணைவர் தம்மொடும். (நூஎச)

வணங்கின னெழுந்துபின் வள்ள றேர்ந்திட
விணங்கலன் றன்மக னெதிர்ந்து போர்செயா
வணங்குட னிரிந்தது மனைத்துஞ் செப்பலுங்
கணங்களின் முதல்வன்மேற் கருணை யாற்றினான். (நூஎரு)

நல்லருள் புரிந்தபின் னம்பி யிப்பகற்
றொல்லம ருழத்தலிற் றுன்பங் கூர்ந்துளா
யெல்லிது பொழுதுநின் னிருக்கை தன்னிடைச்
செல்லுதி துணைவரோ டென்று செப்பினன். (௬எசு)

செப்பலும் விடைகொடு செம்மல் பின்னவர்
மெய்ப்படு பாரிடம் விரவச் சென்றொரா
யொப்பருந் தனதுபே ருறையுள் வைகினன்
றுப்புறு தானைக டொன்மை போலுற. (௬எஎ)

சேயவன் விடுத்திடு சேனை பாசறை
போயது மிருந்ததும் புகலுற் றுமினி
மாயிரு வளங்கெழு மகேந்தி ரப்பதி
யாயிடை நிகழ்ந்தவா றறியக் கூறுவாம். (௬எஅ)

ஆடுறு சமரிடை யழிந்து முன்னரே
யோடிய வவுணர்கோ னுள்ளந் தன்னிடைப்
பாடுறு துயரமும் பழியு மானமு
நீடினன் பெருமித நிலைமை நீங்கினன். (௬எசு)

கோனுறு மந்திரங் குறுகல் செய்திலன்
றானுறு திருநகர் தன்னி லேகியே
யூனம துடையர்போ லுயங்கி வைகினன்
பானுவின் பகைஞனென் றுரைக்கும் பண்பினன். (௬அ0)

மந்திரக் கிளையொடு மருவ வேண்டலன்
றந்திரத் தமரொடுஞ் சார்தல் வேண்டலன்
சிந்துரத் தொல்பகைச் சென்னி போற்றிய
விந்திரப் பெருந்தவி சிருக்கை வேண்டலன். (௬அக)

ஆடுறு மங்கைய ராடல் வெஃகலன்
பாடுறு மங்கைய ரிசையிற் பற்றலன்
கூடுறு மங்கையர் குழாமு நோக்கல
னூடுறு மங்கையர் புணர்ப்பு முன்னலான். (௬அஉ)

நிசாவது சென்றபின் னெடுஞ்செவ் வேலுடை
விசாகனை யவன்படை வீரர் தங்களை
யசாவுறு செருவில்வென் றுடல் கொள்வதற்
குசாவினனுளத்துட னூக்கம் வேறிலான். (௬அ௩)

வேறு.

ஆதவன் றன்பகை யவ்வழி யமர்தனு
மேதகுந் தொல்சமர் வினைவெலா நோக்கியே
மூதகுந் திருநகர் முழுமணிக் கோயிலிற்
றூதர்கை தொழுதுபோய்ச் சூரனுக் குரைசெய்வார். (௬அச)

கேட்டியா லுன்மகன் கேடிலா வாகைசேர்
தோட்டுணை யானெடுந் தொல்சம ராற்றியே
யீட்டுபல் பூதரை யீறுசெய் திவ்விடை
மீட்டும்வந் தெய்தினன் வினையமுண் டாங்கொலோ. (௬அரு)

அன்னபண் புணர்கிலே மதனேமே லறிதியான்
மின்னுதண் சுடருடை வேலவன் றாதனும்
பன்னரும் படையொடும் பாசறைக் கேகினு
னின்னதால் வினைவெனு விவையெலாம் பகர்தலும். (ருஅசு)

மாற்றலார் தமையட வலியில னுகியே
யூற்றமா மைந்தன்வந் துற்றசொற் கேட்குமுன்
சீற்றமா யெரிவிழி சிதறவே வெய்துயிர்த்
தாற்றவு முறுவலித் தரசனென் றுரைசெய்வான். (ருஅஎ)

மைந்தருந் துணைவரு மருவுபல் சுற்றமுந்
தந்திரத் தலைவருஞ் சமரினுக் கேகலர்
நந்தலில் படையொடு நாளைநான் சென்றுபின்
கந்தனைத் திறல்கொடே கடிதின்மீண் டிடுவனல். (ருஅஅ)

போதிரிப் பொழுதெனப் புகறலும் பணிகுருத்
தூதுவர் போயினர் சூரனு மவுணர்கோ
னேதிலார் தம்மைவென் றிசைபுனைந் திடுதன்மேற்
காதலாய் வைகினன் யாவதுங் கருதலான். (ருஅகூ)

அடுபெரும் போரினை யாற்றியே யாற்றலான்
முடிவிலா விறல்கொள முன்னுவீ ரர்க்கெலா
நெடியளாய்த் திறலிலா நெஞ்சினு ருக்கெலாங்
கடியளாய் வைகினள் கங்குலா நங்கையே. (ருகூ0)

பிரிகுவார் தங்களைப் பிரிகலா தேனையோ
ரருகுதா னிற்கலா தச்சநா ணின்றியே
விரகநோய் தெறுதலான் மிக்கதோர் தூர்த்தராய்த்
திரிகுவா ராமெனச் செல்லுமிவ் வெல்லியே. (ருகூக)

பாடுசா றென்றிசைப் பார்புரந் திடுமிரா
வீடுசால் வெம்பக லெல்லொடும் வருவது
நேடியே மதியெனு நீள்குடை முன்செல
வோடல்போற் போயதா லுடுவெனும் படையொடும். (ருகூஉ)

மையிருட் கலையினை மகிழ்நனு மதிகிலாக்
கையினு னீக்கியே கலவிசெய் தகலுழி
வெய்யவன் வருமெனு வெள்கியத் துகிலுடீஇ
யொய்யெனப் போயினள் கங்குலென் றுற்றுளாள். (ருகூங)

ஆ திருவிருத்தம் - சடுஎ.

---

வசனம்.

தூதர்களே, நீங்கள் விரைந்துபோய் என்மகனுகிய பானுகோபனையழைத்து வாருங்களென்றுசொல்ல, அவர்களும் அப்படியேபோய்த் தெரிவித்தவுடனே பானுகோபன் புறப்பட்டுவந்து தன்தந்தையாகிய சூரபன்மனை வணங்கினன், அவனைச் சூரபன்மன்பார்த்து, என் அருமைமகனே, முருகன் உன்சிறியதந்தையாகிய தாரகனைவென்ற செருக்கினல், நம்மையும் வெல்லத்துணிந்து நமது நகரத்தைத்

தன்பூதப்படைகளாற் சூழ்வித்துக்கொண்டிருக்கிருனும், இப்பொழுதே நீபோய் அச்சிறுவனை அவன் படைவீரரோடுகொன்று வெற்றியோடு மீண்டுவரவேண்டுமென்று கட்டளையிட்டான்.

இப்படி தன்தந்தையாகிய சூரபன்மன் சொல்லக்கேட்ட பானுகோபன், குமரன்முதலியோரைப் பற்றிக்கொண்டுவந்து உமதுசந்நிதியில் விடுகிறேன், தேவரீர் அவர்களுக்குச் செய்யத்தகுந்த சிக்ஷைசெய்யலாமென்றுசொல்ல, சூரபன்மன் அப்படியே செய்யக்கடவையென்று விடைகொடுக்க, பானுகோபன் தேரேறிப் போர்க்குரிய ஆயுதங்கள் பலவற்றையுஞ் சேகரித்துக்கொண்டு புறப்பட்டான். அவனோடு அவன் படைவீரர்களாகிய விசயன், நேமியன், மாயன், முசலிகண்டகன் முதலியோரும் போர்க்கோலங்கொண்டு புறப்பட்டார்கள். அப்போது பானுகோபன் தன்னருகேயிருக்கும் ஒற்றரைநோக்கி, சேமத்தேர் ஒருகோடி கொண்டுவரக் கட்டளையிட, அவர்களும் அப்படியே கொண்டுவந்தார்கள். பிறகு பானுகோபன் வெற்றிமுரசறையச்சென்ருன். அதைக்கண்ட நாரதமுனிவர், பாசறையிலெழுந்தருளியிருக்கிற சண்முகப்பெருமான் சந்நிதியையடைந்து, பெருமானே! தேவரீர் இங்கு வந்திருப்பதையறிந்த சூரபன்மன் தன்புதல்வனுகிய பானுகோபனை உம்மோடு போர்செய்ய அனுப்ப, அவனும் வந்திருக்கிருன். தேவரீர், அவனோடு போர்புரிய எழுந்தருளவேண்டுமென்று சொல்ல, முருகவேள் புன்னகைசெய்து, தம்தம்பியாகிய வீரவாகுதேவரையழைத்து, சூரபன்மன் தன்மகனுகிய பானுகோபனை நம்மோடு போர்செய்ய அனுப்பியிருக்கிருன், நீபோய் அவனையும் அவன்படைகளையும் ஒருநொடிப்பொழுதில் வென்றுவரவேண்டுமென்று கட்டளையிட்டு, நாரதமுனிவரைநோக்கி, சரபசமூகத்தைச் சிங்கங்கள் வெல்லவல்லனலாமோ? நீயே முடிவுகாண்பாயென்றனர். வீரவாகுதேவரும் குமாரக்கடவுளிடத்தில் விடைபெற்று, மேருமலைபோன்ற வில்லொன்றைக் கையிலேந்தித் தேரேறிச்சென்று பானுகோபனையெதிர்ந்தார், பானுகோபனும் எதிர்ந்தான், இருவருடையபடைகளும் ஒன்றுக்கொன்றெதிர்ந்தன. இப்படி யெதிர்ந்து போர்செய்யும்போது பானுகோபன் எய்த அம்புகள் பூதவீரர்மேல் தைத்து அவர்களை வருத்தக்கண்ட சிங்கன் என்னும் பூதவீரன் தன்கையிலிருந்த தண்டாயுதத்தால் அவனைப்புடைக்க, பானுகோபனுடைய தேரும் ஓடாமல் நின்றுவிட்டது. இதைக்கண்ட அக்கினியென்னும் பெயரையுடையவன் அநேகமாயிரம் பாணங்களால் அவனுடம்பை மறைத்துவிட்டான். இவ்வாறு சிங்கனென்னும் பூதவீரனும் அக்கினியென்னும் அவுணவீரனும் ஒருவர்க்கொருவர் இளைக்காமல் நெடுநேரம் போர்செய்து கடைசியில் சிங்கனல் அக்கினி யிறந்துபட்டான். அதுகண்ட சண்டன் வந்தெதிர்ந்தான். அவனும் சிங்கனும் நெடுநேரம் போர்புரிந்து முடிவில் சிங்கனது கைத்தண்டினல் சண்டன் இறந்துசாய்ந்தான்.

இவனது உயிரைக் கொண்டுபோவதற்கு யமதூதரும் அஞ்சினர்கள். சிங்கன் அவர்களுக்குத் தைரியஞ்சொல்லக்கொண்டு போனர்கள். பிறகு அசமுகன் என்னும் அவுணன்வந்தெதிர்ந்து உன்னுயிரை யிதோ வாங்குகிறேனென்று நெருங்கும்போது, மதுவென்பவன்வந்து அசமுகனோடு எதிர்ந்து போர்செய்தான். இருவருஞ்செய்தபோரில் அசமுகன் அயர்வடையக்கண்ட மதுவென்பவன் நிலத்திலே நிற்க, அவன்மீது அசமுகன் திருமாலிடத்திற்பெற்ற சக்கரப்படையையேவ, அது தருமசக்கரமாதலால் நிராயுதனுய்நிற்கிற சிங்கன்மேற்செல்லாமல் மீண்டுவந்து, பிரயோகித்தவனுகிய அசமுகனுடைய தலையையே யறுத்துவிட்டுப்போயிற்று. இப்

படி யிரண்டுபடையிலுமுள்ள வீரர்கள் ஒருவரோடொருவர் போர்புரிந்தகாலத்தில் அவுணப்படை சற்று இளைத்ததுகண்ட பானுகோபன் பூதவீரரை அயர்வடையச் செய்து பூதப்படையையும் புறங்காட்டச்செய்தான். அப்பூதர்ஓடி வீரவாகுதேவரிடத்தில் முறையிடக்கண்ட உக்கிரன் என்னுஞ் சேனுவீரன் பானுகோபனோடெதிர்த்துப் போர்செய்தான். இருவரும் போர்செய்கையில், உக்கிரன் சற்றிளைக்கவே, தண்டியென்பவன் வந்தெதிர்த்தான், அவனையும் தோல்வியடையச்செய்தான். பிறகு பிஞகியென்பவன் வந்தெதிர்க்க அவனையும் மெலிவித்தான், அதன்பிறகு காபாலி நிரஞ்சநன் முதலியோர்கள்வந்து வளைந்துகொண்டு அநேகமாயிரம்பாணங்களையேவ, பானுகோபன் தன்வில்லைவளைத்து அநேகமாயிரம் பாணங்களைத்தொடுத்து அவற்றையெல்லாமறுத்து, இலக்கத்தவர் கையிற்பிடித்திருந்த விற்களையுங் கண்டித்து அவர்களையும் நோவச்செய்தான். அவர்களும் இவனோடு போர்செய்யும் வலியிலராய்ப் பின்னடைந்தார்கள்.

அந்தச்சமயத்தில் நவவீரருள் ஒருவனாகிய வீரகோளரியென்பவன் பெருங் கோபங்கொண்டுவந்து பானுகோபனையெதிர்த்து இலக்கம் பிறைமுகக்கணைகளைப் பிரயோகித்தான். பானுகோபனும் அவைகளைப் பொடிப்பொடியாக்கினதுமல்லாமல் வீரகோளரியையும் மரணமூர்ச்சையடையும்படிசெய்தான். அதுகண்ட வீரமார்த்தாண்டன் வந்தெதிர்த்துப் போர்புரிந்து பானுகோபனுல் அபஜயமடைந்தான். அதைக்கண்ட வீரராக்கதனென்னும் வீரன்வந்து பானுகோபனோடெதிர்த்துப் போர்செய்து வெல்லமாட்டாமல் முடிவில் ஒரு வேற்படையெடுத்துப் பானுகோபன்மேல் எறிய, பானுகோபனும் ஒரு வேற்படையெடுத்தெறிந்து வீரராக்கதனையும் மூர்ச்சையடையச்செய்தான். பிறகு வீராந்தகன், வீரமகேசன், வீரதீரன், வீரமகேந்திரன், வீரபுரந்தரன் என்னும் ஐவரும்வந்து பானுகோபன்மேல் கணைமழைபொழிந்தார்கள். அவர்களையும் பானுகோபன் தனது வில்வித்தையின் சாமர்த்தியத்தால் தோல்வியடைவித்தான்.

இவ்வாறு பானுகோபன், தன்னோடு போர்செய்யவந்த வீரரையெல்லாம் வென்று நின்றசமயத்தில், வீரவாகுதேவர் அவனெதிரேவந்துநின்று தம்வில்லைவளைத்துக் குணத்தொனிசெய்தார். அந்தத்தொனி தேவரசுரரெல்லாரும் நடுங்கச்செய்தது. அதுகண்ட பானுகோபன், வீரவாகுதேவரைநோக்கி, நீயொரு வீரனுமல்ல, தேவனுமல்ல, தூதாகவந்த நீயோ என்னோடு போர்செய்யவந்தாய், உன்னுயிரையொருநொடியில் யமலோகத்திற் சேர்த்துவிடுகிறேன். ஆனல் தூதனுய்வந்தவனைக் கொன்முனேயென்று உலகம்பழிக்குமே, அதற்கஞ்சுகின்றேன் என்முன். அதுகேட்ட வீரவாகுதேவர் பானுகோபனைநோக்கி, உன் ஆண்மையை நீயேசொல்லிக் கொள்வது தகுதியல்ல, விரைந்து போர்செய்து உன்னுண்மையை வெளிப்படுத்தக்கடவையென்று தம்வில்லில் அநேகமாயிரம் கணைதொடுத்தார். அவனும் அநேகமாயிரம் கணைகளைத்தொடுத்து வீரவாகுதேவர்மேல் விடுத்தான். இவ்வாறு மஹாவீரராகிய இருவரும் மண்விண்களெல்லாம் நடுங்கும்படி ஆரவாரித்துத் தம் தேர்களை ஆகாயவீதியில் வட்டமாய்ச் சுற்றிவரச்சுழற்றியும், வலமிடமாய்ச்சுழற்றியும், அம்பு, வேல், வாள் முதலிய ஆயுதங்களால் தங்கள்தங்களுடைய ஆற்றல்முழுதுங்காட்டிப் போர்புரிந்தும் வெற்றிதோல்விகள் எற்படாமலிருந்தன. அப்பொழுது பானுகோபனுனவன், போர்புரியவந்தவீரரெல்லாரும் என்னெதிர்நிற்கமாட்டாமல் பின்னடைந்துபோயினர். இவனொருவனேநின்று நெடுநேரம் என்னுடனே சமயுத்தம்செய்துநிற்கிமுன். இனி யிவனை வைக்கப்படாது, உயிர்வாங்குவதே தகுதி

யென்று பெருஞ்சினங்கொண்டு வீரவாகுதேவருக் கெதிரேவந்து நெருங்கினின்ருன். அவ்வாறு சென்றுநெருங்கி அவர்மேல் முத்தலைக்கணைகள் ஆயிரந்தொடுத்தெய்தான். அவற்றையெல்லாம் வீரவாகுதேவரும் அத்தனைபாணங்கள்விட்டுத் துணித்தெறிந்தார். பானுகோபன் மீண்டும் பதினுயிரம் பாணங்களையெய்ய, அவற்றை வீரவாகுதேவரும் பதினுயிரம் பாணங்களைத்தொடுத்துக் கண்டித்தார். இப்படி யிருவரும் ஒருவர்க்கொருவர் இளைக்காமல் போர்செய்கையில், பானுகோபனுனவன், ஒருதூதனுகவந்தவன் இவ்வளவுநேரம் நம்மோடு போர்செய்யவிடுவது நமது பேராற்றலுக்குப் பழுதாமென்று ஒரு மோகனுஸ்திரத்தையெடுத்து அபிமந்திரித்துவிடுக்க, அதைக்கண்டு வீரவாகுதேவரையொழிந்த மற்றையரெல்லாரும் மனங்கலங்கினுர்கள். வீரவாகுதேவர் ஒன்றுந்தோன்ருமல் அசைவற்றுநின்ருர்.

இதையுணர்ந்த சண்முகப்பெருமான் ஒரு அமோகப்படையையேவிப் பானுகோபன்விட்ட மோகனுஸ்திரத்தின் வலியையழித்துவிடுதலும் அது மீண்டுபோய்விட்டது. வீரவாகுதேவர் முதலியோர் மயக்கந்தெளிந்து, சண்முகப்பெருமான்விடுத்த அமோகப்படையானது நம்மைக்காத்தது என்றுமகிழ்ந்து அப்பெருமானைத்துதித்து மீட்டும் போர்க்கோலங்கொண்டு நின்ருர்கள். அப்பொழுது வீரவாகுதேவர் ஒரு சிவாஸ்திரத்தைக் கையிலெடுத்துநிற்பதைக்கண்ட பானுகோபன், நாம் இனி யிங்குநிற்போமானுல், இந்த அஸ்திரம் நம்மைக்கொன்றுவிடும், நாம் நமதூர்க்குப் போய்த் தெய்வதப்படைகளைக் கொண்டுவந்து இவனேடுபோர்செய்து வெல்லவேண்டுமென்று நிச்சயித்து மாயையால் தன்னுருவைமறைத்துச் சென்ருன். இவன் மறைந்ததுகண்ட அவுணர்களும் தொலைந்தோடிவிட்டார்கள். பிறகு வீரவாகுதேவர் தம்பூதப்படைகளுடனேகுமாரநாயகன் சந்நிதியையடைந்து பானுகோபன்செய்திமுழுதும் விண்ணப்பஞ்செய்ய, அப்பெருமான் திருச்செவிசாத்தியருளி, நன்று செய்தாயென்று மகிழ்ந்து, உன்துணைவரோடு உனது இருக்கைக்குப்போகலாமென்று விடைகொடுக்கப்பெற்றுத் தமது இருக்கையையடைந்தார். சூரியனும் அஸ்தமித்தான்.

புறங்காட்டிச்சென்ற பானுகோபன் அன்றிரவெல்லாம் வீரவாகுதேவரை வெல்லத்தகுந்தவுபாயங்களை யோசித்துக்கொண்டிருந்தான். தூதுவர்கள் சூரனிடத்திற்போய்ப் பானுகோபனுக்கும் வீரவாகுதேவருக்கும் நிகழ்ந்த போர்ச்செய்திமுதலியவற்றையும் பானுகோபன் மீண்டுவந்ததையும் வீரவாகுதேவர் தம்பாசறையடைந்ததையும் சொன்னுர்கள். அதைக்கேட்ட சூரபன்மன், இவர்களையெல்லாம் அனுப்புவதில் பிரயோஜநமில்லை, நானே நாளைக்குச்சென்று அந்தச்சிறுக்கனையும் அவன்படைவீரரையும்வென்று மீள்வேனென்றுசொல்லித் தூதுவரையனுப்பிவிட்டுப் பகைவரைவெல்லுமுபாயத்தைச் சிந்தித்துக்கொண்டிருந்தான். அன்றிரவங்கழிந்தது, சூரியனும் உதித்தான்.

முதனுட்பானுகோபன்யுத்தப்படலம் முற்றிற்று.

---

# இரண்டாநாட்சூரபன்மன்யுத்தப்படலம்.



கங்குல்போந் திடுதலுங் கணபணப் பன்னக
நுங்குரு தகலவே நோற்றுமா லேந்திடுஞ்
சங்கமாய் மதிசெலச் சக்கரப் படையெனத்
துங்கமோ டெழுதல்போற் ருேன்றினன் பரிதியே. (க)

வேறு.

இரவி செல்லுமுன் னவுணர்கோன் றுயிலொரீஇ யெழுந்து
மரபி னிற்புரி நாட்கடன் முடித்துமன் றெய்தித்
திரும ணிப்பெருந் தவிசிடை யிருந்துதன் சிறுவ
னெருந லுற்றிடும் வசையினை யுளத்திடை நினைந்தான். (உ)

நினைத லுற்றுழி யுளத்திடைப் பெருஞ்சின நீட
வினிய மர்த்தொழிற் கியாவரையும் விடுக்கிலன் யானே
யனிக மோடுபோய் மாற்றலர் வன்மையை யழித்துப்
புனைவன் வாகையென் றுன்னினு னழிவிலாப் புகழோன். (௩)

செங்கண் வாளெயிற் றவுணனித் தன்மையைத் தேற்றி
வெங்க ணொற்றரி லளப்பிலர் தங்களை விளியா
வங்கண் மாநில முறைமுறை சூழ்தரு மளக்க
ரெங்க ணுஞ்செறி தானையைத் தம்மின்க னென்றான். (௪)

என்ற லுந்தொழு தாயிர கோடியோர் யாண்டுஞ்
சென்று சென்றுதம் மன்னவன் பணிமுறை செப்பத்
துன்று தேர்கரி பரிமிசைப் படர்ந்தனர் தொன்னாள்
வென்றி கொண்டநூ றாயிர வெள்ளத்தின் மிக்கோர். (ரு)

வேறு.

சூலமே கணிச்சி தண்டந் தோமரங் குலிசஞ் சாபங்
கோலவாள் பலகை வட்டங் குந்தம்வே லுஞ்சில் பிண்டி
பாலமே முசுண்டி சங்கம் பரிதியே யெழுவே தட்டி
பீலிவன் முசல மாதி பெரும்படை கொண்டு சென்றார். (சு)

எண்டகு மினைய வாற்றா லிலக்கம்வெள் ளத்தி னேருந்
திண்டிறன் மகேந்தி ரப்பேர்த் திருநகர் சுற்றி யார்ப்ப
விண்டொடு சிகரி யென்னு மேருவி னுச்சி போகிக்
கண்டன னவுணர் மன்னன் கடற்பெருந் தானைச் சூழல். (எ)

தேக்கினன் கதிருஞ் செல்லாச் செல்லுறழ் தானை யீட்ட
நோக்கினன் சிந்தை கொண்ட நோன்மைசார் துயரம் யாவு
நீக்கினன் வன்மை பெற்றா னேரலர்ப் பொருது வென்றி
யாக்கினன் போல நின்றா னறத்துட னருளைக் கொன்றான். (அ)

அழிந்திடு கின்ற காலத் தளக்கரி னார்த்துச் சூழும்
கழிந்திடு தானை கண்டோன் கடிதுபோர்க் கேக முன்னிச்
செழுங்கதிர் மதிய மாக்குந் திருமணிச் சிகரி நின்று
மிழிந்தனன் றலைமை நீங்கி யிழிதொழில் பயின்ற தீயோன். (கூ)

எடுத்தனன் சிலையு மேனைப் படைகளு மிமையோர் தொன்னாட்
கொடுத்திடு படைகள் யாவுங் கொண்டனன் கரத்திற் கோதை
தொடுத்தனன் வெரிநிற் றாணி தூக்கினன் விரல்க டோறு
மடுத்தபொற் புட்டில் சேர்த்தா னண்டங்க ளனைத்தும் வென்றான். (க0)

குந்தளச் சுழியற் குஞ்சிக் கோலமா மௌலி தன்னிற்
சுந்தரத் துணர்மென் றும்மை தொடுத்திடு பிணையல் சேர்த்தி
மந்தரப் பொருப்பு மேரு வரையிதென் றையஞ் செய்யு
மிந்திரப் பெருந்தே ரொன்றி னேறின னிரவி யேபோல். (கக)

பண்ணுலாம் புரவிப் பந்தி பருமிதக் களிற்றி னீட்ட
மெண்ணிலாப் புரவி மான்றே ரேமமாய்ப் பின்ன ரேக
வண்ணல்வா ளவுண வீர ரமைச்சர்க ளயலிற் செல்ல
விண்ணுலாம் புரிசைக் கோயில் வீதிகள் கடந்து சென்றான். (கஉ)

கோயிலி னெல்லை நீங்கிக் கோபுரங் கெழீஇய கொற்ற
வாயிலின் மருங்கு செல்ல மன்னவன் வரவு நோக்கிக்
காய்கதிர்த் தபனற் கண்ட கலிவிய னுலக மென்ன
வாயிர நூறு வெள்ளத் தவுணரும் புடைசூழ்ந் தார்த்தார். (கங)

வேறு.

அன்ன காலையி லரிமுகன் சேயதி சூரன்
றுன்னு தாரகன் சுதனசு ரேந்திரத் தொல்லோ
னென்ன நின்றிடு மைந்தர்க ளிருவரு மேகி
மன்னர் மன்னனை யடைதலு மினையன வகுப்பான். (கச)

திரைகொள் வேலைபோ னிறைதரு கோட்டகஞ் சிறிதோர்
கரையி லாவழி யுடைந்திடு மன்னது கடுப்பப்
பொருதி றற்படை பலவுள வென்னினும் போற்று
மரச ரில்வழி நின்றிடா தன்மைவை யழியும். (கரு)

ஆத லாலினி நீரிரு வீர்களு மமரின்
மேத கும்பெருஞ் சேனைக்கு முதல்வராய் மேவிப்
போதிர் முன்னுற வென்றலு நின்றிடு புதல்வ
ரீது நன்றென வணங்கியே யேகின ரிமைப்பில். (கசு)

தந்த மான்றடந் தேர்மிசை யேறியே சமரிற்
கொந்து லாமலர் வாகையை மிலைச்சிய குமரர்
வந்த நாற்பெரும் படையையு மணிபெற வகுத்து
முந்து தானையந் தலைவரா யேகினர் முறையால். (கஎ)

ஆகு மெல்லையி லங்கது நோக்குறு வடுபோர்
வாகை கொண்டநூ றாயிர வெள்ளத்து மறவோ
ரோகை யெய்தியே யமர்புரி பறந்தலை யுன்னி
யேகன் மேயினர் பணிகளுஞ் சேடனு மிரங்க. (கஅ)

வேறு.

கடந்திகழ் கரிதேர் பாய்மாக் கலந்திடத் தானை வீரர்
படர்ந்திடு கின்ற காலைப் பருமணி வயிரத் தேர்மே
லடைந்திடு மவுணர் மன்ன னளக்கரில் வடவை சுற்ற
விடந்தனி நடந்த தென்ன விண்ணவர் மருளச் சென்றான். (கசு)

தொண்டகந் துடியே பம்பை தூரிய முருடு கோடு
திண்டிமற் படக மொந்தை திமிலையே தடாரி தக்கை
கண்டையா குளியே பீலி காகள முடிக்கை பேழ்வாய்
கொண்டதோர் பதலை சங்கங் குடமுழா வியம்பிற் றம்மா. (உ0)

தட்டிடை நெடுந்தே ரார்ப்புந் தந்தியி னார்ப்புஞ் சேண்போய்
முட்டுறு கொடிக ளார்ப்பு முரட்பரி யார்ப்பும் வீரர்
கட்டுறு கழலி னார்ப்புங் கணிப்பில்பல் லியத்தி னார்ப்பு
மெட்டுள திசையு மெல்லா வுலகுமுண் டெழுந்த வன்றே. (உக)

நீனிற முகில்போன் மேனி யவுணர்க ணீத்தஞ் செல்லக்
கானிறை பூழி யீட்டங் ககனமேற் செல்ல முன்னந்
தானுறு கின்ற காலைச் சசியெனத் தயங்கிப் பின்னர்
மீனெனக் கரந்தான் மேலாம் விரிகதிர் படைத்த வெய்யோன். (உஉ)

நேசமோ டென்பால் வைகு நெறியினர் தமக்கு வீடு
மாசறு பதங்கள் யாவும் வைகலும் புரிவே னென்னை
யேசுவர் போலுங் கீழென் றிகல்புரிந் திடுவ னென்னாத்
தூசிபார் விடுத்த தேபோற் றுறக்கமேற் சென்ற பூழி. (உந)

கன்னிறை யழித்த மொய்ம்பிற் கார்கெழு மவுண வெள்ளந்
துன்னுற நடப்பச் செல்லுந் தூளியின் படலைச் செய்கை
யென்னென வுரைப்ப னம்மா விந்திர னென்போன் வைகும்
பொன்னுல கதனை வல்லே பூவுல காக்கிற் றன்றே. (உச)

கண்ணகன் றடந்தேர் மீதுங் காய்சினக் களிற்றின் மீது
நண்ணிய கொடிகள் வான்போய் நளிர்புனற் கங்கை நக்கி
மண்ணுறச் சிதறி யாடி யலமரன் மகேந்தி ரத்தி
னண்ணலின் றழிவ னென்றே யழுதிறம் போலு மாதோ. (உரு)

திங்கள்வெண் குடையு நீலத் திருநிழற் கவிப்புஞ் செங்கேழ்ப்
பங்கய மலர்ந்த தன்ன பருமணிக் கவிகை முற்றுந்
தொங்கலின் றொகையும் வெய்யோன் றொல்கதிர் வரவு மாற்றி
யெங்கணுஞ் செறிவுற் றாழி யிருளினை விளக்கிற் றம்மா. (உசு)

வேறு.

ஆனவியல் பெய்தவவு ணப்படைக ளோடும்
வானெறிகொ டேயவுணன் வையமிசை செல்லத்
தானதுதெ ரிந்தமரர் தம்மிறைவ னேடிக்
கானமர்க டம்பனடி கைதொழுது சொல்வான். (உஎ)

அன்றுபுரி வேள்வியிடை யாதியருள் செய்த
துன்றுபடை யீட்டமொடு சூரனெனும் வெய்யோ
னின்றுபொரு வான்விரைவி னேகின னெதிர்ந்தே
சென்றவனை வென்றெமது சீரருளு கென்றான். (உஅ)

ஆம்பரிசு கூறவவ னுக்கருள் புரிந்தே
யெம்பலுறு கேசரியி னேற்றணையி னீங்கிப்
பாம்பின்வலி செற்றுலவு பாகுதனை நோக்கி
வாம்பரிகொ ணம்மிரதம் வல்லைதரு கென்றான். (உகூ)

என்றிடலு நன்றெனவெ ழுந்துலவை யண்ணல்
குன்றனைய தேரது கொணர்ந்துமுன முய்ப்ப
வென்றியயி லண்ணலதன் மீமிசை புகுந்தான்
மன்றன்மலர் சிந்தையயன் மாலொடு வழுத்த. (நo)

செழுந்தருண மேதகைய தேரின்மிசை வானோர்
தொழுந்தலைவ னாகியமர் தொன்முருக னேறக்
கொழுந்தழன் முடித்தனைய குஞ்சிகெழு பூத
ரெழுந்தனர் தெழித்தன ரிருங்கடலு மஞ்ச. (நக)

நாட்டமொரு மூன்றுடைய நாதனருண் மைந்தன்
வாட்டமறு வெவ்வவுணர் மன்னன்வலி தன்னை
வீட்டும்வகை சென்றிடுதல் விண்ணவ ருரைப்பக்
கேட்டனிக பூதர்கள் கிளர்ந்துபடர் கின்றார். (௩௨)

பாரிடர்க ளாயறு முகற்பரவு கின்ற
பாரிடர் நடப்பவெழு பூழிபடர்ந் தின்னோர்
பாரிடர் புரிந்தனர் பரிக்குமெனை யென்னப்
பாரிடம்விண் ணோடுபகர் தற்கெழுதல் போலும். (௩௩)

தக்கையொ டுடுக்கைதுடி சல்லரி தடாரி
தொக்குடைய தண்ணுமை துவைப்பின்மிகு பேரி
மெய்க்குடமு ழாப்படகம் வீணைகுழ லாம்பல்
கொக்கரை யியம்பினர்கள் கோடிகண நாதர். (௩௪)

நாடுதவ நாரதனு நல்லுவணர் தாமுங்
கேடிலிசை வல்லதொரு கின்னரரு மாகிப்
பாடினர்கு மாரனடி பன்முறை பணிந்தே
யாடினர்கள் விண்ணவரு மாசின்முனி வோரும். (௩௫)

சண்முகன தேவல்கொடு தாவிலிளை யோனு
மெண்மருமி லக்கர்களு மீண்டிய கணத்தின்
வண்மைகெழு மன்னவரும் வையமிசை யாகித்
திண்மைபடை யூக்கமொடு சேனையிடை சென்றார். (௩௬)

மொய்ம்மலி படைத்தலைவர் முந்தியுறு தானை
யிம்முறையி னுலொழுக வீசனருண் மைந்தன்
செம்மணிவில் வீசியமர் தேரினிடை யேகிப்
பொம்மலுறு தானவர்கள் போர்முனை யடைந்தான். (௩௭)

அடைந்தபொழு திற்புவியு மந்தரமு மாகி
மிடைந்துவரு சூரனிகம் வெய்தென வளைந்த
தொடர்ந்துறுகர் தீவலிதொ லைத்துமென முந்நீர்
படர்ந்துபுடை சுற்றியிடு பான்மையது போல. (௩௮)

வேறு.

வளைந்திடு காலையில் வயவெம் பூதர்கள்
கிளர்ந்தனர் தெழித்தனர் கெழுவு தானவர்
தளந்தனை யடர்த்தன ரவருந் தாக்கினார்
விளைந்தது பெருஞ்சமர் விண்ட தண்டமே. (௩௯)

மாச்சினை மரங்களும் வரையுந் தண்டமுந்
தீச்சிகைக் கழுமுளுந் திகிரி நேமியு
மீச்செலுங் கவண்கலும் வேலு நாஞ்சிலு
மோச்சினர் பூதர்க ளொன்ன லார்கண்மேல். (௪௦)

மெய்ப்படு மவுணர்கள் வெகுண்டு வில்லுமி
முப்பொடு கணிச்சிதண் டாழி நாஞ்சில்வேன்
முப்புக ரிலைப்படை முசல முற்கரங்
கப்பணஞ் சிதறினர் கணங்க டம்மிசை. (௪௧)

